30th March 1961]

SRI K. ANBAZHAGAN : ஊர் பொதுமக்களுக்கு உரியதாயிருக்கிற ஒரு கிணற்றின் தண்ணீர் எல்லோருக்கும் பயன்படவேண்டியிருக்கிறபோது, மின்சார மோட்டார் போட்டு ஒருவர்மட்டும் அந்தத் தண்ணீரை பயன்படுத்த சர்க்கார் அனுமதித்தால் அதனால் மற்ற பொதுமக்கள் பாதிக்கப்படமாட்டார்களா ? அவர்களுக்குத் தண்ணீர் கொடுக்க என்ன உத்தரவாதம் இருக்கிறது ?

THE HON. SRI V. RAMAIAH : அதைத்தான் சொன்னேன். யாருக்கு சொந்தம் என்று திட்டவட்டமாக முடிவு செய்யப்படவில்லை. மின்சார கனக்ஷன் வேண்டுமென்று சொன்னவர்கள் அவர்களுக்கு உரிமையிருக்கிறதென்று ஒரு கருத்து சொல்லியிருக்கிறார்கள். பொது மக்களுக்கு உரிமையிருப்பதாக ஒரு கருத்து சொல்லியிருக்கிறார்கள். அங்கிருக்கக்கூடிய ஒரு நிலே, என்ஜினியர் அவர்கள் துரிதமாக நடவடிக்கை எடுத்துவிட்டார்கள். அதற்குக் காரணம் என்னவென்று டிபார்ட்மென்டிலிருந்து என்கொயர் செய்து கொண்டிருக்கிறார்கள். ஆகவே உபகேள்விகள் மூலம் யாருக்கு சொந்தம் என்று சொல்ல நான் தயாராயில்லை, இப்பொழுது.

SRI M. A. B. ARUMUGHASAMI : மின்சார இணைப்பு கொடுக்கப்பட்ட கிணறு பொது மக்களுடையதா அல்லது தோட்டச் சொந்தக்காரருடையதா யாருக்கு உரிமையென்று முடிவு தெரியும் வரையில் கொடுக்கப்பட்டிருக்கும் மின்சார இணைப்பைப் துண்டித்து பொது மக்களின் அபிலாஷையைப் பூர்த்தி செய்வார்களா ?

THE HON. SRI V. RAMAIAH : இதைப் பரிசிலனை செய்த அதிகாரிகள், இரண்டு போகளுக்கும் உரிமை இருப்பது மாதிரி சொல்லியிருக்கிறார்கள். ஆகவே திட்டவட்டமாக முடிவு எடுக்கவேண்டுமென்றால் கோர்ட்டுக்குப் போக வேண்டுமென்று பரிசிலனை செய்த அதிகாரிகள் முடிவு சொல்லியிருக்கிறார்கள். ஆகவே, பொது மக்கள் உரிமை பாதிக்கப்பட்டிருக்கிறது என்று சொன்னால், ஆறுமுகஸ்வாமி அவர்கள் சொல்வதை ஓரளவு ஏற்றுக்கொள்கிறேன். ஆனால் ஆறுமுகஸ்வாமி அவர்களுக்கு இதில் கொஞ்சம் இன்டரஸ்ட் இருப்பதாக எனக்கு தகவல் இருக்கிறது. ஆகவே, இதை மறுபடியும் எழுப்பாமல் இருப்பது நல்லது.

*Textile mills*

*1184 Q.—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. Minister for Industries be pleased to state—

(a) the total number of textile mills in the State and the total installed capacity of spindles and looms as on 31st December 1960;

(b) whether any representation was made by the State Government to the Government of India for increasing the allotment of spindles; and

(c) if so, with what results?

THE HON. SRI R. VENKATARAMAN : (a) On 31st March 1960 there were in this State 134 textile mills with 30, 85 and 292 spindles and 7,489 looms. Particulars of figures as on 31st December 1960 will become available only during March/April 1961.

(b) Yes, sir.

(c) Reply from the Government of India is awaited.

SRI M. KALYANASUNDARAM : மத்திய அரசாங்கத்திற்கு நம்முடைய சார்க்கார் அனுப்பிய யோசனை என்ன? எப்போது அனுப்பினார்கள் ?

THE HON. SRI R. VENKATARAMAN : இரண்டு மூன்று மாதங்களுக்கு முன்பு அனுப்பப்பட்டது. யோசனை என்ன என்பது "கான்பிடன்ஷியல்".

SRI M. KALYANASUNDARAM : நம்முடைய ராஜ்யத்தில் இருந்து வரும் ஸ்பின்டில்கள் போதுமானவையாக இருக்கின்றனவா ?

THE HON. SRI R. VENKATARAMAN : போதாது.

SRI A. A. RASHEED : May I know whether spindles are allotted on the basis of population or on the basis of need and backwardness of the region ?

THE HON. SRI R. VENKATARAMAN : The question has to be addressed to the Government of India.

*Veterinary hospitals*

* 1185 *Q.*—SRI V. K. KOTHANDARAMAN : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

1960-ல் வடாற்காடு ஜில்லாவில் இதுவரை திறக்கப்பட்டுள்ள கால்நடை வைத்திய நிலையங்கள், முதலுதவி நிலையங்கள் எத்தனை, தாலூகா வாரியாக ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : Two Veterinary First Aid Centres, one at Ponnai and the other at Vanghur, have been opened in the North Arcot district and they are functioning with effect from 3rd May 1960. No Veterinary Hospital or Veterinary Dispensary has been opened in the district during the period.

A statement [a] showing the number of Veterinary Hospitals, Vetrinary Dispensaries, Minor Veterinary Dispensaries and First Aid Centres now functioning in North Arcot district is placed on the table of the House.

SRI V. K. KOTHANDARAMAN : ஸார், குடியாத்தம் தாலூகாவில் பேரணம்பட்டு என்ற இடத்திலும், ஆந்திராவிலிருந்து புதிதாக சேர்ந்திருக்கும் பரதராமி என்ற இடத்திலும் அதிகமான கால்நடைகள் இருப்பதால், அவைகளுக்கு ஏதாவது சிகிச்சை செய்யவேண்டுமென்றால் 10, 15 மைல் தூரம் போக வேண்டியிருக்கிறது. ஆகவே உடனடியாக இந்த இரண்டு இடங்களிலும் டிஸ்பென்ஸரியோ அல்லது ஆசுபத்திரியோ ஏற்படுத்துவதற்கு அரசாங்கம் முன் வருமா ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : இப்போது இருக்கின்றவை எல்லாம் போதாது. மேற்கொண்டு எந்தெந்த இடங்களில் எல்லாம் தேவையோ அந்த இடங்களில் எல்லாம் கால்நடை ஆசுபத்திரிகளை நிறுவுவதற்கு உடனடியாக நிதிநிலைமை இடம் கொடுக்கவில்லை. இதோடு உள்ளூரில் எவ்வளவு ஒத்துழைப்பு கிடைக்கிறதோ, அதைப்பொறுத்தும் ஏற்பாடுகள் செய்யப்படும்.

*Fertilizers*

* 1186 *Q.*—SRI P. G. MANICKAM : கனம் உள்துறை அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விகளுக்குப் பதிலளிப்பாரா—

(அ) தேசிய அபிவிருத்தித் திட்டப் பிரதேசங்களிலுள்ள கிராமப் பஞ்சாயத்துக்கள் மூலமாக உரங்கள் உற்பத்தி செய்வதற்காக 1959, 1960-ம் வருடங்களிலே எவ்வளவு தொகை பஞ்சாயத்துக்களுக்குக் கொடுக்கப்பட்டது ?

(இ) என்னென்ன வகையான உரங்கள், எவ்வளவு உற்பத்தி செய்யப்பட்டன ?

(உ) மத்திய சர்க்காரால் வழங்கப்பட்ட உதவித்தொகை எவ்வளவு ?

THE HON. SRI M. BHAKTAVATSALAM : A statement [b] is placed on the table of the House.

---

[a] Printed as Appendix II on pages 526–527 infra.
[b] Printed as Appendix III on page 528 infra.